# திருப்புகழமிர்தம்






ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சௌமிய ஆனி

## கும்பாபிஷேகம்

திருச்சி, குமாரவயலூர் ஸ்ரீ முருகப்பெருமான் திருக்கோயிலில் நாளது சௌமிய ஆண்டு ஆனித் திங்கள் 5-ஆம் நாள் (19-6-69) வியாழக்கிழமை காலை 9 மணிக்கு மேல் 11 மணிக்குள் கடக நல்வோரையில் மகாகும்பாபிஷேகம் இனிது நிகழும். அன்பர்கள் கண்டு சேவித்துஇகபர நலன்களை யடைவார்களாக.

---

உ

முருகா

## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்

## அவதார நாள் விழா

**சௌமிய - ஆனி - 15-ஆம் நாள் (29-6-1969) ஞாயிற்றுக்கிழமை**

1. காங்கேய நல்லூர்த் திருப்புகழ்ச் சபையாரால் ஸ்ரீ முருகப் பெருமான் திருக்கோயிலிலும்,
2. மதுரைத் திருப்புகழ்ச் சபையாரால் ஸ்ரீ மீனுக்ஷியம்மன் கோயிலில் தெற்கு ஆடி வீதியில் உள்ள திருப்புகழ்ச் சபையிலும்,
3. ஸ்ரீ அருணகிரிநாத பக்தஜன சபையாரால் சென்னை, கந்தகோட்டம் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி கோயில் மெத்தை மண்டபத்திலும்,
4. நெல்லைத் திருப்புகழ்ச்சபையாரால் திருநெல்வேலி தொண்டர்கள் நயினர் கோயிலிலும்,
5. விராலிமலைத் திருப்புகழ்ச் சபையாரால் ஷெ யூர் மலைக் கோயிலிலும்,
6. திருச்சிராப்பள்ளித் திருப்புகழ்ச் சபையாரால் பிற அன்பர்களாலும், வயலூர் ஸ்ரீ முருகப் பெருமான் திருக்கோயிலிலும்.

இன்னும் பிறஇடங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெறும்.

---

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ 5-50 |

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந் திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 34 | சௌமிய ஙூ—ஆனி மீ ஜூன் 1969 | இதழ் 3

## திருப்புகழ்

### திருவண்ணுமலை

உருகு மாமெழு காகவு மேமயல்
பெருகு மாசையு ளாகிய பேர்வரி
லூரிய மேடையில் வார்குழல் நீவிய வொளிமானுர்
உடைகொள் மேகலை யால்முலை மூடியும்
நெகிழ நாடிய தோதக மாடியு
முவமை மாமயில் போல்நிற மேனிய ருரையாடுங்

கரவ தாமன மாதர்கள் நீள்வலை
கலக வாரியில் வீழடி யேனெறி
கருதொணுவதி பாதக னேசம தறியாத
கசட மூடனை யாளவு மேயருள்
கருணை வாரிதி யேயிரு நாயகி
கணவ னேயுன தாளிணை மாமலர் தருவாயே

சுருதி மாமொழி வேதியன் வானவர்
பரவு கேசனை யாயுத பாணிநல்
துளப மாலையை மார்பணி மாயவன் மருகோனே

*1444—1*

தொலேவி லாவசு ரேசர்க ளானவர்
துகள தாகவு மேயெதி ராடிடு
சுடரின் வேலவ னேயுல கேழ்வலம் வருவோனே
அருணர் கோடியி னுரொளி வீசிய
தருண வாண்முக மேனிய னேயர
னணையு நாயகி பாலக னேநிறை கலேயோனே
அணிபொன் மேருயர் கோபுர மாமதி
ளதிரு மாரண வாரண வீதியு
ளருணை மாநகர் மேவியு லாவிய பெருமாளே.

பதவுரை

சுருதி மாமொழி வேதியன்=வேதங்களில் சிறந்த மொழிகளே ஓதும் அந்தணனுகிய பிரம தேவனும், வானவர் பரவு=தேவர்களும் புகழ்ந்து துதி செய்கின்ற, கேசன்=கேசவன், ஐ ஆயுதபாணி=ஐந்து ஆயுதங்களைத் தாங்கிய திருக்கரங்களையுடையவன், நல் துளப மாலையை=நல்ல துளவமாலையை, மார்பு அணி மாயவன்=திருமார்பில் தரித்த மாயவனும் திருமாலின், மருகோனே=திருமருகரே! தொலேவு இலா=அழிவு இல்லாத, அசுர ஈசர்கள் ஆனவர்=அசுரர்களின் தலேவர்களான சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் என்பவர்கள், துகள் அது ஆகவுமே=பொடியாகுமாறு, எதிர் ஆடிடு=எதிர்த்துப் போர் புரிந்த, சுடரின் வேலவனே=ஒளி வீசுகின்ற வேலாயுதக் கடவுளே! உலகு ஏழ்வலம் வருவோனே=ஏழு உலகங்களேயும் வலம் வந்தவரே! அருணர் கோடியினுர் ஒளி வீசிய=கோடிக் கணக்கான சூரியர்களின் ஒளி வீசும், தருண வாள்முக மேனியனே=இளமை ஒளி விளங்கும் முகத்தையுடைய திருமேனியரே! அரன் அணேயும் நாயகி பாலகனே=சிவபெருமான் தழுவுகின்ற பார்வதியின் பாலகரே! நிறை கலேயோனே=நிறைந்த கலேப் புலவரே! அணி பொன் மேரு உயர் கோபுரம்=அழகிய பொன் மேரு மலேபோல் உயர்ந்த கோபுரமும், மாமதிள்=பெரிய மதில்களும், அதிரும் ஆரணம்=வேதவொலி முழங்குவதும், வாரண வீதி உள்=யானேகள் உலாவுவதுமாகிய வீதிகளும் உள்ள, அருணே மா நகர்=அண்ணுமலேயாகிய பெருமை தங்கிய நகரில், மேவி உலாவிய=விரும்பி உலாவுகின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! உருகு மா மெழுகு ஆகவுமே=உருகி ஒழுகும் நல்ல மெழுகுபோல், மயல் பெருகும் ஆசை உள் ஆகிய பேர்வரின்=மயக்கம் பெருகும் காமத்தில் உட்பட்ட பேர்வழிகள் வந்தால், உரிய மேடையில்=தமக்கு உரிய மாடிமேல் இருந்து, வார் குழல் நீவிய நீண்ட குழலே வாரி முடித்துக் கொள்ளும், ஒளி மாஞர்=அழகிய விலேமாதர்கள், உடைகொள் மேகலேயால் முலே மூடியும்=மேலாடையால் தனங்களே மூடியும், நெகிழ

நாடிய தோதகம் ஆடியும்=அந்த ஆடை நெகிழ்வதற்கு வேண்டிய ஜால வித்தைகள் ஆடியும், உவமை மாமயில் போல்=உவமை கூறப்படும் சிறந்த மயில் போன்ற, நிற மேனியர்= நல்ல நிறங்கொண்ட உடலழகியர், உரையாடும் கரவு அதுஆம் மனம் மாதர்கள்=பேசுவதில் திருட்டுத்தனம் அமைந்த மன முடைய மாதர்களான அப்பொதுமகளிரின், நீள்வலை=நீண்ட வலை யாகிய, கலகவாரியில் வீழ் அடியேன்=கலகக் கடலில் வீழ்கின்ற அடியேன், நெறி கருத ஒணு அதி பாதகன்=நன்னெறியை நினைக்க மாட்டாத பெரும் பாதகன், நேசம் அறியாத=அன்பு என்பதையே அறியாத, கசட மூடனை=குற்றமுள்ள மூடனை, ஆளவுமே அருள் கருணைவாரிதியே=ஆட்கொள்ள அருளிய கருணைக்கடலே! இரு நாயகி கணவனே=வள்ளி தேவயானையென்ற இரு மனைவியர்களின் நாயகரே! உனதாள் இணை மாமலர் தருவாயே=உமது இரு திருவடி களாகிய சிறந்த மலர்களைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

வேதங்களில் சிறந்த மொழிகளை ஓதுகின்ற பிரம்மதேவ னும் தேவர்களும் புகழ்ந்து துதி செய்யப்பெற்றவரும், கேச வரும் பஞ்சாயுதபாணியும், நல்ல துளவமாலை தரித்த திருமார் பினரும் மாயஞ் செய்பவருமாகிய திருமாலின் திருமருகரே! அழிவில்லாத அசுரர் தலைவர்களாகிய சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் என்ற அசுரர்கள் பொடியாகுமாறு எதிர்த்துப் போர் புரிந்த ஒளி வீசுகின்ற வேலாயுதத்தையுடையவரே! ஏழு உலகங்களையும் வலம் வந்தவரே! கோடி சூரிய ஒளியுடைய இளம் ஒளிமுகத்தையுடைய திருமேனியரே! சிவமூர்த்தி தழு விய உமாதேவியின் திருமைந்தரே! நிறைந்த கலைப்புலவரே! அழகிய பொன் மேருமலைபோல் உயர்ந்த கோபுரங்களும், பெரிய திருமதில்களும், வேதங்கள் முழங்க யானைகள் உலா வும் திருவீதிகளும் உடைய அருணைமாநகரில் விருப்பத்துடன் உலா வருகின்ற பெருமிதமுடையவரே! உருகியொழுகும் நல்ல மெழுகுபோல் மயக்கம் வளருகின்ற காமத்தில் உட்பட்ட பேர் வழிகள் வந்தால், தமது மாடிமீது அமர்ந்து நீண்ட கூந்தலை வாரி முடிக்கும் அழகிய மாதர்கள், மேலாடையால் தனங்களை மூடியும், அந்த ஆடை விலகுமாறு ஜாலவித்தைகள் செய்தும், சிறந்த மயில்போன்ற அழகிய மேனியர்; திருட்டுத்தனமாக உரையாடுபவர்களாகிய பொதுமகளிரின் நீண்ட வலையாகிய கலகக் கடலில் விழுகின்ற அடியேன், நன்னெறியை நினைக்க மாட்டாத பெரும்பாதகன்; அன்பு என்பதனை அறியாத குற்றம் நிறைந்த மூடனை ஆட்கொள்ள அருள்புரிந்த கருணைக்கடலே! வள்ளி தேவசேனை என்ற இருவருடைய மணவாளரே! உமது இருதிருவடிகளாகிய சிறந்த மலர்களைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**உருகி மாமெழு காகவுமே :—**

பெண்களாகிய நெருப்பிடம் ஆண்கள் மெழுகைப்போல் உள்ளம் உருகிவிடுவார்கள்.

**"அங்கார ஸத்ருசீ நாரீ**
**க்ருத கும்ப சம: புமான்"**

என்கின்றது நாரத பரிவ்ராஜகம் என்ற உபநிடதம்.

அங்காரம்—நெருப்பு.
நாரீ—பெண்.
க்ருதகும்பம்—நெய்க்குடம்.
புமான்—ஆண்.

பெண்ணாகிய நெருப்பை நெருங்கினால், நெய்க்குடம் போன்ற ஆண்மகன் உள்ளம் உருகிவிடுகின்றது.

இந்த உபநிடதக் கருத்தை அருணகிரியார் இந்த அடியில் கூறினார்.

**மயல் பெருகு மாசையுளாகிய பேர்வரின் :—**

ஆசை (மயல்) மயக்கத்தைப் பெருக்குகின்றது. இன்னது செய்வது, இது செய்யத்தகாதது என்ற தெளிவைப் போக்கி எதனையுந் துணிந்து செய்யும் மயக்கத்தைத் தருகின்றது. காமமாகிய ஒன்று இருளைப் பொருள்படுத்தாது. மரண பயத்தையும் மறக்கச் செய்து கோர நடனம் புரிவது காமம்.

**உரிய மேடையில் வார்குழல் நீவிய:—**

தம் மீது ஆசைகொண்ட ஆடவர்கள் தம்மிடம் வந்தவுடன், தமக்குரிய மாடிமீது அமர்ந்து, கூந்தலை வாரி அழகாக முடித்துக் கொள்வார்கள் பொதுமகளிர். விதம் விதமாக முடிப்பார்கள்.

**கரவதா மனமாதர்கள்:—**

அப்போது மாதர்கள் கரவுத்தனத்தை உள்ளடக்கி இனிமையாகப் பேசுவார்கள். உதட்டில் தேனும் நெஞ்சில் வஞ்சமாகிய நெருப்பும் இருக்கும்.

**நீள்வலை கலகவாரியில் வீழ்:—**

மையலாகிய நீண்ட வலையுடன் கூடிய, கலகமாகிய கடலில் வீழ்ந்து ஆடவர் கரைகாணாது கலக்கமடைவார்கள்.

**நெறி கருதொணுவதி பாதகன்:—**

"உய்யும் நெறி எது? நாம் ஏன் பிறந்தோம்? இந்த உடம்பு எவ்வாறு வந்தது? தானே வந்ததா? ஒருவன் தந்து வந்ததா? தந்தவன் எதற்காகத் தந்தான்? தந்த தலைவன் எத்தன்மை

யன்? அவனை அடைந்தவர் யார்? அடையும் வழியெது?'' என்பனவாதி சிந்தனையே யில்லாது, உண்பதும் உறங்குவது மாகவே மாந்தர் வாழ்ந்து வீழ்கின்றனர்.

**நேசமதறியாத கசடமூடனை:—**

நேசம்—அன்பு.

இறைவனை யடையும் நெறி அன்பு ஒன்றேதான். இறைவன்பால் அன்பை வைத்தால் அவன் அருளைத் தருகின்றான்.

அன்பு இன்னதென்றே அறியாத குற்றம் நிறைந்த மூடன்.

**ஆளவுமே யருள்:—**

"இத்தகைய நன்னெறியறியாத மூடனாகிய அடியேனை ஆட்கொண்டு அருளினான் முருகன்'' என்று அடிகளார் இந்த அடியில் கூறுகின்றார். சிறியேனுடைய பக்குவத்தையோ தகுதியையோ கருதி முருகன் ஆட்கொள்ளவில்லை. ஆட்கொண்டதற்குக் காரணம் அப்பெருமானுடைய அளப்பற்ற கருணையே. காரணமில்லாத கருணை. இதனை அவ்யாஜ;கருணை என்பர் வடநூலார்.

அப்பரடிகள் தன்னை இறைவன் ஆண்ட கருணையைக் கூறுகின்ற அழகிய அருட்பாடலை இத்துடன் ஒப்பு நோக்குக.

**அத்தாவுன் னடியேனை அன்பாலார்த்தாய்**
**அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்**
**எத்தனையும் அரியைநீ எளியை யானாய்**
**எனையாண்டு கொண்டிரங்கி ஏன்று கொண்டாய்**
**பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்**
**பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தாயன்றே**
**இத்தனையும் எம்பரமோ? ஐய! ஐயோ**
**எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே.**

**கருணைவாரிதியே:—**

இறைவன் கருணைக் கடலாக விளங்குகின்றார்.

**''கருணைமேகமே ஈறில் கருணைமேருவே தூய**
**கருணைவாரியே தேவர் பெருமாளே''**

என்னும் பிறிதொரு பாடலில் முருகனை அடிகளார் துதிக்கின்றார்.

அழுக்கு மயமான அசுத்தநீர் கடலில் கலந்தவுடன் அதன் அழுக்கு நீங்கப்பெற்று கடல் நீராக மாறுவதுபோல் தீயவர் களையும் இறைவன் தூயவராக்கி தன்னில் சேர்த்து அருள் புரிகின்றான்.

தீயவை புரிந்தாரேனும் முருகவேள் திருமுன்உற்ருல்
தூயவராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாள் செய்த
மாயையின் மகனுமன்ரே வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்.

—கந்தபுராணம்.

**இருநாயகி கணவனே:—**

வள்ளி தெய்வயானை யென்ற இரு தேவியர்க்கு நாயகன் முருகன்.

வள்ளி—இச்சாசக்தி.
தெய்வயானை—கிரியாசக்தி.

இரு சக்திகளைக் கொண்டு உயிர்களுக்கு முருகன் அருள் புரிகின்ருன்.

**தாளிணை மாமலர் தருவாயே:—**

இறைவனுடைய இரு திருவடிகள் அபரஞானம் பரஞானம் என்ற இருஞானங்களாகும் என வுணர்க.

''வள்ளல்தொழு ஞானக் கழலோனே''

—(துள்ளு திருப்புகழ்.)

''ஞானமேயாய சேவடியுடையாய்''

—வில்லிபாரதம்—கண்ணன் தூது.

**சுருதி மாமொழி வேதியன்:—**

சுருதி—வேதம். செவியால் கேட்டு உணர்வது வேதம். ஆதலால் சுருதி யெனப்பட்டது. எழுதாக் கிளவி வேதம். வேதத்தில் சிறந்த மொழிகளை ஓதுபவர் பிரமதேவர். அப் பிரமதேவரால் துதி செய்யப்பெற்றவர் திருமால்.

**வானவர் பரவு கேசனே:—**

கேசவன் என்ற சொல் கேசன் எனக் குறுகியது. தேவர்கள் துதித்துப் போற்றுகின்ற மூர்த்தி கேசவர்.

**ஐயாயுதபாணி:—**

திருமாலுக்கு ஐந்து ஆயுதங்கள்; சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்பவை. பஞ்சாயுதபாணி.

''கரத்திலைம்படையும்''

—வில்லிபாரதம்—பாயிரம்.

**தொலைவிலா வசுரேசர்:—**

தேவர்களால் அழிவுபடாத அசுரர் தலைவர்கள் மூவர். சூரபனமன், சிங்கமுகன், தாரகன் என்ற தலைவர்கள். இவர்கள் வேலினுல் பொடிபட்டழிந்தார்கள்.

**உலகேழ்வலம் வருவோனே:—**

முருகப் பெருமான் ஏழு உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வந்து தேவர்கள் முருகனே பரமபதி என்று உணர்ந்து உய்யும் பொருட்டு அருள்புரிந்தார்.

"இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை ஒருநொடியில் வலமாக ஓடுவதும்"
—சீர்பாத வகுப்பு.

**அருணர் கோடியி னுமரொளி வீசிய:—**

முருகப் பெருமானுடைய திருமேனி ஒருகோடி சூரியப் பிரகாசம் பொருந்தியது. ஆணவ இருளை யகற்றி ஞான வொளி வீசுவது.

"சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்"
—சீர்பாத வகுப்பு.

**நிறை கலையோனே:—**

எல்லாக்கலைகளும் நிறைந்த மெய்ஞ்ஞானப் புலவன் முருகன்.

**அணிபொன் மேருயர் கோபுரம்:—**

திருவண்ணுமலையில் உள்ள கோபுரம் மிகவும் உயர்ந்தது. பொன் மேருகிரிபோல் காட்சி தருகின்றது.

**மாமதில்:—**

பெரிய சுற்றுமதில்கள் சூழ்ந்த திருத்தலம்.

**அதிரு மாரண வாரண வீதி:—**

ஆரணம்—வேதம். வாரணம்—யானை. திருவண்ணுமலை வீதியில் வேதங்கள் முழங்குகின்றன. யானைகள் கெம்பீரமாக உலாவுகின்றன.

## கருத்துரை

அருணசலமேவும் அண்ணலே! உன் அடிமலரைத் தந்தருள்.

## திருப்புகழ்

கரியுரி அரவ மணிந்த மேனியர்
கலைமதி சலமு நிறைந்த வேணியர்
கனல்மழு வுழையு மமர்ந்த பாணியர் கஞ்சமாதின்

கனமுலை பருகி வளர்ந்த காமனை
முனிபவர் கயிலை யமர்ந்த காரணர்
கதிர்விரி மணிபொ னிறைந்த தோளினர்கண்டகாள

விரிவென வுனது ளுகந்த வேலென
மிகவிரு குழையு மடர்ந்து வேளினை
யனையவ ருயிரை விழுங்கி மேலும்வெ குண்டுநாடும்

வினைவிழி மகளிர் தனங்கள் மார்புற
விதமிகு கலவிபொருந்தி மேனியு
மெழில்கெடநினைவுமழிந்து மாய்வதொ ழிந்திடாதோ

எரிசொரி விழியு மிரண்டு வாளெயி
றிருபிறை சயில மிரண்டு தோள்முகி
லெனவரு மசுரர் சிரங்கள் மேருஇ டிந்துவீழ்வ

தெனவிழ முதுகு பிளந்து காளிக
ளிடுபலி யெனவு நடந்து தாள் தொழ
எதிர்பொரு முதிர முகந்த வேகமு கைந்தவேலா

அரிகரி யுழுவை யடர்ந்த வாண்மலை
அருணையி லறவு முயர்ந்த கோபுர
மதிலுறை குமர அநந்த வேதமொ ழிந்துவாழும்

அறுமுக வடிவை யொழிந்து வேடர்கள்
அடவியி லரிவை குயங்கள் தோய்புய
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே.

## பதவுரை

எரிசொரி விழியும் இரண்டு=நெருப்பைச் சொரிகின்ற இரண்டு கண்களுடனும், இரு பிறை வாள் எயிறு=இருபிறைச் சந்திரனைப் போன்ற ஒளியுடைய பற்களுடனும், சயிலம் இரண்டு தோள்=மலை போன்ற இரண்டு தோள்களுடனும், முகில் என வரும்=கரிய மேகம் போல் வந்த, அசுரர் சிரங்கள்=அசுரர்களின் தலைகள், மேரு இடிந்து வீழ்வது என விழ=மேருமலை இடிந்து வீழ்வதுபோல் விழவும், முதுகு பிளந்து=முதுகு பிளவுபடவும், காளிகள்=போர்க்களத்துக் காளிகள், இடுபலி எனவும் நடந்து தாள் தொழ=தமக்கு இட்ட பலியுணவு என்று நடந்து உமது திருவடியைத் தொழவும், எதிர் பொருது=எதிர்த்துப் போர் செய்து, உதிரம் உகந்த வேகம் உகைந்த வேலா=உதிரத்தை விரும்பின வேகத்துடன் சென்ற வேற்படையுடையவரே!

அரி=சிங்கம், கரி=யானை, உழுவை=புலி, அடர்ந்த வாள் மலை= முதலிய விலங்குகள் நெருங்கியுள்ள ஒளி வீசும் மலையாகிய, அருணை யில்=திருவண்ணுமலையில், அறவும் உயர்ந்த கோபுரம் அதின் உறை குமர=மிகவும் உயர்ந்த கோபுரத்தில் வீற்றிருக்கும் குமாரக் கடவுளே! அனந்த வேதம் மொழிந்து வாழும்=அளவில்லாத வேதங்கள் துதி செய்ய வாழுகின்ற, அறுமுக வடிவை ஒழிந்து=ஆறு முக வடிவத்தை விட்டு, வேடர்கள் அடவியில்=வேடர்கள் வாழு கின்ற கானகத்தில், அரிவை குயங்கள் தோய்புய=வள்ளிநாயகியின் தனங்களைச் சேரும் தோள்களையுடையவரே! அரிஅர பிரம புரந்தர ஆதியர்=திருமால் உருத்திரன் பிரமன் இந்திரன் முதலியவர் போற் றும், தம்பிரானே=தனிப்பெருந் தலைவரே! கரி உரி=யானையின் உரித்த தோலையும், அரவம் அணிந்த மேனியர்=பாம்பையும் தரித்த திருமேனியரும், கலைமதி=கலைகள் கொண்ட சந்திரனும், சலமும் நிறைந்த வேணியர்=கங்கையும் நிறைந்த சடையினரும், கனல்= நெருப்பையும், மழு=மழுவாயுதத்தையும், உழையும் அமர்ந்த பாணி யர்=மானையும் தரித்த திருக்கரத்தினரும், கஞ்சமாதின்=இலக்குமி யின், கனமுலை பருகி வளர்ந்த காமனை=அழகிய கொங்கையின் பாலையுண்டு வளர்ந்த மன்மதனை, முனிபவர்=காய்ந்து அழித்த வரும், கயிலை அமர்ந்த காரணர்=திருக்கயிலாய மலையில் அமர்ந் துள்ள மூலப் பொருளானவரும், கதிர்விரி மணி பொன் நிறைந்த தோளினர்=ஒளிவீசும் இரத்தினமும் பொன்னும் நிறைந்த தோளையுடையவரும், ஆகிய சிவபெருமானுடைய, கண்ட காள விரிவு என=கழுத்தில் உள்ள விஷத்தின் விரிவோ இது என்னும் படியும், உனது உள் உகந்த வேல் என=தேவரீருடைய திருவுள்ளத் துக்கு உகந்த வேலாயுதமோ இது என்னும்படியும், மிகவும் இரு குழையும் அடர்ந்து=இரண்டு குழைகளை மிகவும் நெருங்கியும், வேளினை அனையவர் உயிரை விழுங்கி=மன்மதனை யொத்த அழ குள்ள ஆடவர்களின் உயிரையே விழுங்கியும், மேலும் வெகுண்டு= பின்னும் கோபித்தும், நாடும் வினை விழி=நாடுகின்ற செயலினை யுடைய கண்களையுடைய, மகளிர் தனங்கள் மார்பு உற=பொது மாதர்களின் கொங்கைகள் மார்பில் பொருந்த, வித மிகு கலவி பொருந்தி=பலவிதமான காமலீலைகளில் பொருந்தி, மேனியும் எழில் கெட=உடலின் அழகு அழியவும், நினைவும் அழிந்து=நினைவு அழிந் தும், மாய்வது ஒழிந்திடாதோ=இறந்து போகும் தன்மை தொலை யாதோ?

## பொழிப்புரை

நெருப்பைப் பொழிகின்ற இரண்டு கண்களுடனும், இரு பிறைச் சந்திரனை யொத்த ஒளியுடைய பற்களுடனும், மலை போன்ற இரு தோள்களுடனும், பெரிய மேகம் வருவதுபோல் வந்த அசுரர்களின் தலைகள், மேருமலை இடிந்து விடுவதுபோல்

விழவும்; முதுகு பிளவுபடவும், போர்க்களத்துக் காளிகள் தமக்கு இட்ட பலியுணவு என்று நடந்து உமது பாதங்களைத் தொழவும், எதிர்த்துப் போர்புரிந்து, உதிரத்தை விரும்பிய வேகத்துடன் சென்ற வேற்படையை யுடையவரே! சிங்கம் யானை புலி முதலிய விலங்குகள் நெருங்கி வாழும் ஒளியுடன் கூடிய திருவண்ணுமலையில் மிகவும் உயர்ந்த கோபுரத்தில் எழுந்தருளியுள்ள குமாரமூர்த்தியே! அளவற்ற வேதங்கள் துதி செய்ய விளங்கும் ஆறுமுக வடிவை விடுத்து, வேடர்கள் வாழும் கானகஞ் சென்று வள்ளிபிராட்டியின் தனங்களைச் சேரும் புயங்களையுடையவரே! திருமால் உருத்திரன் பிரமன் இந்திரன் முதலிய இமையவர் போற்றும் தனிப்பெருந் தலைவரே! யானையை உரித்த தோலையும் பாம்பையும் தரித்த திருமேனியை யுடையவரும், கலைகளுடன் கூடிய சந்திரனையும் கங்காநதியையும் சூடிய சடைமுடியினரும், நெருப்பையும் பரசு என்ற ஆயுதத்தையும் மானையும் ஏந்திய திருக்கரத்தினரும், தாமரையில் வாழும் திருமகளின் அழகிய தனத்தின் பாலைப்பருகி வளர்ந்த மன்மதனைக் காய்ந்தவரும், திருக்கயிலாயமலையில் எழுந்தருளியுள்ள மூலகாரணரும், ஒளி வீசுகின்ற இரத்தினமணிகள் பொன் பூண்ட தோளையுடையவரும் ஆகிய சிவபெருமானுடைய திருககழுத்தில் விளங்கும் ஆலகால விடத்தின் விரிவுதான் இது என்னும்படியும், தேவரீர் திருவுள்ளத்துக்கு உவந்த வேலாயுதந்தான் இதுவோ என்னும்படியும், காதுவரை மிகவும் நீண்டு, மன்மதனை யொத்த ஆடவர்களின் உயிரையே விழுங்கியும், பின்னும் கோபித்தும், நாடுகின்ற செயல்களைச் செய்யும் கண்களையுடைய பொதுமாதர்களின் தனங்கள் மார்பில் பொருந்த பலவிதமான கலவியின்பத்தில் திளைத்து, உடம்பு அழகு இழந்து நெளிய, நினைவு கெட்டு இறந்துபடும் அவலநிலை அடியேனை விட்டு நீங்கமாட்டாதோ ?

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் பொதுமகளிரது கண் எத்தன்மையது என்று அடிகளார் கூற முயலுகின்ருர்.

ஏனைய புலவர்கள் கண்கள் நஞ்சுபோன்றது என்று கூறுவார்கள். ஆனுல் அருணை முனிவர் பெருமான் சிவபெருமானுடைய கண்டத்தில் விளங்கும் ஆலகால விடம் போன்றது என்று கூறுகின்ருர். அவ்வாறு கூறவந்த அடிகளார் சிவபெருமானை ஆறுவரிகளில் புகழ்ந்து துதி செய்கின்ருர்.

**கரி யுரி யரவ மணிந்த மேனியர்:—**

தாருகவனத்து முனிவர்கள் சிவபெருமானைக் கொல்லுமாறு, அபிசார வேள்வியில் கரிய பெரிய யானையை உண்டாக்கி அனுப்பினுர்கள். சிவபெருமான் கருங்குன்றுபோல்

வந்த யானையை உரித்து அதன் தோலைப் போர்த்திக் கொண்டருளினார்: இந்த மூர்த்தி கஜ சம்மாரர் எனப்படுவர்.

வழுவூர் என்ற திருத்தலத்தில் கஜசம்மார மூர்த்தி கண் கொள்ளாத காட்சியுடன் விளங்குகின்றார்.

சிவபெருமானைக் கொல்ல நினைந்த தாருகவனத்து முனிவர்கள் அபிசார வேள்வியில் கொடிய பாம்புகளைத் தோற்றுவித்து சிவமூர்த்திமீது ஏவினார்கள். கருணைக் கடலாகிய கண்ணுதற் கடவுள் அந்தப் பாம்புகளைக் கொல்லாது அணிகலன்களாகப் பூண்டு அருள்புரிந்தார்.

**கலைமதி சலமு மணிந்த வேணியர்:—**

தக்கனுடைய சாபத்தால் கலைகள் தேய்ந்து உயிர் ஓய்ந்து சரணம் அடைந்த சந்திரனைச் சிவபெருமான் சடைமுடிமீது சூடி பேரருள் புரிந்தருளினார்.

சந்திரனும் கங்கையும் திண்மையும் தண்மையும் உடையவை. குளிர்ந்த தன்மையைத் தலையில் வைக்கவேண்டும். தலை குளிர்ச்சியாக இருக்கவேண்டும். ''பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்'' என்கின்றார் அப்பர் பெருமான்.

**கனல் மழு வுழையு மமர்ந்த பாணியர்:—**

சிவபெருமான் நெருப்பையும் மழுவையும் மானையும் திருக்கரங்களில் தரித்துள்ளார்.

**''மழுமான் கரத்தனை மால்விடையானை '** —பட்டினத்தார்.

**'மான்சாய செங்கை மழுவ லஞ்சாய''** —பட்டினத்தார்.

**''மழுமானின் கரத்தனருள் முருகோனே''**

—(தேனுந்து) திருப்புகழ்.

**கஞ்சமாதின் கனமுலைபருகி வளர்ந்த காமனை:—**

திருமாலின் சித்தத்தில் தோன்றியவன் மன்மதன். அதனால் சித்தஜன் என்று பேர் பெற்றான். இலக்குமியின் திருமுலைப்பாலுண்டு வளர்ந்தான்.

''செம்பதுமைத் திருக்குமரா! தமியேனுக் காருயிரே!
திருமால் மைந்தா!''

—கந்தபுராணம்.

**காமனை முனிபவர்:—**

தேவர்கள் ஏவலால் மன்மதன் சிவமூர்த்தி யோக நிலையைக் குலைக்குமாறு வந்து ஐங்கணை ஏவினான். சிவபெருமான் நெற்றிக் கண்ணால் அவனைப் பொடியாகக் காய்ந்தருளினார்.

"கற்றவர் சாய்வது காமனையே
கனல்விழி சாய்வது காமனையே" —திருஞானசம்பந்தர்.

**கயிலையமர்ந்த காரணர்:—**

கயிலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே எல்லாவற்றுக்கும் மூலகாரணமானவர்.

**கண்டகாள விரிவென:—**

சிவபெருமானுடைய திருக்கழுத்தில் விளங்கும் ஆலகால விடத்தின் விரிவு இதுவோ என்று எண்ணுமாறு பொது மாதருடைய கண்கள் விளங்குகின்றன.

**உனது ளுகந்த வேலென:—**

உனது உள் உகந்த வேல்.

முருகவேள் உள்ளம் உவந்து வேலை யேந்தியுள்ளார். அவர் மிகவும் விரும்புவது வேல். வேல் போன்ற கூர்மை யுடையது அம்மாதருடைய கண்கள்.

**மிகவிரு குழையு மடர்ந்து:—**

கண்களின் சிறந்த இலக்கணங்களில் ஒன்று காதுவரை நீண்டிருப்பது.

"கன்னபூரங் கலந்த செங்கண்ணியே" —வில்லிபாரதம்.

**மாய்வ தொழிந்திடாதோ:—**

"பொதுமாதர் மயலில் அழுந்தி வீணே அழிந்துபோம் அவலநிலை எனக்கு எய்தாவகை யருள் செய்" என்று அடிகளார் முருகனிடம் முறையிடுகின்ருர்.

**எரி சொரி விழியும்:—**

அசுரர்கள் சீற்றமே வடிவானவர்கள். அவர்களின் கண்கள், கனற்பொரி சொரிகின்றது.

**அருணையிலறவு முயர்ந்த கோபுர மதனுறை குமர:—**

திருவண்ணுமலையில் வல்லாள மன்னனுடைய திருக்கோபுரத்தில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார்.

"அருணை நெடுந்தடங் கோபுரத்தமர்ந்த அறுமுகப் பெருமாளே"
(தமரகுரங்களும்) திருப்புகழ்.

**அநந்த வேதமொழிந்து வாழும் அறுமுக:—**

அநந்தம்—எண்ணில்லாதது. முடிவில்லாதது.

# கற்பு

---

## தமிழ்மணி

தமிழ்மணி என்ற செல்வப் புதல்வியை கண்ணை இமை காப்பது போல் தாயம்மாள் இனிது வளர்த்தாள்.

தமிழ்மணி நல்லாசிரியனையடுத்து அறிவு நூல்களைப் பயின்றாள். ஒருநாள் ஆசிரியரைப் பார்த்துப் பெண்களுடைய குணங்கள் எத்தனை? என்று வினவினாள். ஆசிரியர், "அம்மா! ஆறு குணங்களை யுடையவள் பெண்.

தாய் போன்ற கருணையும், அடிமை போன்ற பணிவிடையும், இலக்குமி போன்ற அழகும், நிலமகளைப் போன்ற பொறுமையும், விலைமகள் தரும் இன்பமும், மந்திரியைப் போன்ற நன்மதி கூறும் திறமும் ஆகிய ஆறு குணங்களையுடையவள்தான் சிறந்த பெண்.

'அன்னை தயையும் அடியார் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும்—வன்னமுலை
வேசி துயிலும் விறன்மந்திரி மதியும்
பேசில் இவையுடையாள் பெண்'.

என்ற நீதிவெண்பாவின்படி பெண் வாழ்தல் வேண்டும்" என்றார்.

---

எண்ணற்ற வேதங்கள் யாவும் முருகனே பரம்பொருள் என்று கூறுகின்றன.

அரியர பிரம புரந்தராதியர் தம்பிரானே:—

திருமாலாதி மூவர்க்கும் இந்திராதி இமையவர்க்குந் தலைவர் முருகவேள்.

"படைத்தளித்தழிக்குந் த்ரிமூர்த்திகள் தம்பிரானே"
—(கனைத்ததிர்க்கு) திருப்புகழ்.

"தேவச் சொர்க்க சக்கிரவர்த்திப் பெருமானே"
—(கோவைசுத்த) திருப்புகழ்.

### கருத்துரை

அருணைமேவும் அண்ணலே! மாதர் மயலால் அழியாது அருள் செய்.

தமிழ்மணி, "குருநாதா! மந்திரி மதி என்ற சொல்லுக்கு விளக்கம் கூறுமாறு வேண்டுகின்றேன்" என்றாள்.

குருநாதர், "குழந்தாய்! கூறுவேன். "மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தல்" பின்னே வருவதைத் தன் மதிநலத்தால் நுனித்தறிந்து முன்னே கூறுபவன்தான் மந்திரி. இதற்கு ஒரு எடுத்துக்காட்டு கூறுவேன் கேள்."

இராமராயர் நீதி தவறாது அரசு புரிந்தார். அவருடைய தவப் பயனாய் ஒரு மகன் பிறந்தான். அவனுக்குக் கிருஷ்ணதேவன் என்று பேர் சூட்டினார்.

இராமராயர் நோய்வாய்ப்பட்டார். மருத்துவர்கள் எத்தனையோ முயன்றும் நோய் தணியவில்லை. எல்லோரும் கைவிட்டார்கள். பேரரசர் தன் அருமை முதல் அமைச்சரை அழைத்து, "என் அன்புக்கு உரிய அமைச்சரே! என் காலம் முடிந்து விட்டது. இந்த அரசாங்கத்தையும், என் தவப் புதல்வன் கிருஷ்ணதேவராயனையும் உம்மிடம் அடைக்கலமாக ஒப்புவிக்கின்றேன். என் மகனை நல்ல விதமாக வளர்த்து, கல்வி கேள்விகளில் வல்லவனாக்கி, உரிய காலத்தில் அரிய அரசுரிமையை அவனிடம் நீர் ஒப்புவிக்கவும். உமக்கு ஈசன் கருணை புரிவார்" என்று கூறி, கண்ணீர் சிந்தியவண்ணம், இளம் மகன் கரமலரை மந்திரியின் கையில் வைத்து, "சிவ சிவ" என்று கண்களை மூடிவிட்டார். அமைச்சர் கிருஷ்ணதேவராயரைக் கொண்டு நெருப்புக்கடன், நீர்க்கடன்களைச் செய்வித்தார்.

மதிமிகு மந்திரியார் கிருஷ்ணதேவராயனைத் தன் சொந்த மகனைக் காட்டிலும் அதிக பட்சத்துடன் வளர்த்தார். ஒவ்வொரு கலையிலும் மிகவும் தேர்ச்சி பெற்ற ஆசிரியர்களைக் கொண்டு சிறந்த கல்விப் பயிற்சியளித்தார். கிருஷ்ணதேவராயன் கற்பூர புத்தியுடன் மிக நுட்பமான கலைகளையெல்லாம் கற்றான். கல்வி பயிலாத நேரங்களில் பயின்றதைச் சிந்திப்பான். பசுமாடு உணவு கொண்ட பின் அசை போடுவதுபோல மாணவர்களுக்கு சிந்தனை பெரும் பயன் தருகின்றது. அசை போடாத மாடு நோய்வாய்ப்பட்டது. அது பிழைக்காது. அதுபோல் சிந்திக்காத மாணவன் முன்னுக்கு வரமாட்டான்.

கிருஷ்ணதேவராயன் அடக்கம், முயற்சி, ஊக்கம், பணிவு முதலிய குணநலன்களையுடையவனாய் விளங்கினான். அவன் மந்திரியாரை அப்பாஜீ அப்பாஜீ என்று அழைத்தான். அதுவே அவருக்குப் பேராக வழங்கலாயிற்று.

கிருஷ்ணதேவராயன் கட்டிளங்காளைப் பருவமடைந்தான். அவனுடைய அன்னை மகனுடைய தோற்றத்தையும் ஏற்றத்தையும் பார்த்து விம்மிதம் அடைந்தாள்.

அப்பாஜி நல்ல நாளில் கிருஷ்ணதேவராயனுக்கு முடிசூட்டினர். அரசாங்கத்தை அவனிடம் ஒப்புவித்தார். அமைச்சருடைய அளவற்ற சாமர்த்தியத்தால் நாடு பல வகையிலும் முன்னேற்றமடைந்திருந்தது. படை வலிமை மிகுந்திருந்தது. பயிர்களும் உயிர்களும் செழித்திருந்தன. எங்கும் சோலேகளும் அறச்சாலேகளும் நிறைந்திருந்தன

ஒரு நாள் கிருஷ்ணதேவராயன் அரியணே மீது வீற்றிருந்தான். ''அப்பாஜீ! எல்லா அரசர்களும் ஒழுங்காக நமக்குக் கப்பங் கட்டி வருகின்றர்களா?'' என்று கேட்டான். அப்பாஜி, ''வேந்தே! எல்லோரும் காலந்தவருமல் கப்பங் கட்டி வருகின்றர்கள். கலிங்க மன்னன் மட்டும் 3 ஆண்டுகளாகக் கப்பங் கட்டவில்லே. நாம் அனுப்பும் திருமுகத்துக்கும் மறுமொழியனுப்புகின்றனில்லே. தாங்கள் இளமையானவர்தானே என்று அவமதிக்கின்றன் போலும். நான் அதுபற்றிப் பலமுறை சிந்திக்கின்றேன்'' என்றர்.

கிருஷ்ணதேவராயன் அது கேட்டு இடி முழக்கம்போல் சிரித்தான். ஆலகாலவிடம்போல் சீறினன். அரச சிங்கம்போல் குதித்து எழுந்தான். பெருமதிப்புக்குரிய அப்பாஜி! இப்போதே போருக்குப் புறப்பட வேண்டும் என்று கருதுகின்றேன். தங்கள் கட்டளே எவ்வாறே?'' என்றன்.

அப்பாஜி, ''மன்னவரே! அடங்காதவனே நாம் அடக்குவது முறைதான். புறப்படுவோம்'' என்றர். சேனதிபதிக்குக் கட்டளேயிட்டார். தேர், யானே, குதிரை, காலாள் என்ற நால்வகைச் சேனேகளும் மிகுந்த ஊக்கத்துடன், தலே தீபாவளிக்கு மாமனர் வீட்டுக்குச் செல்லும் மருமகனேப்போல் மகிழ்ச்சியுடன் புறப்பட்டன. ஈட்டி, எறியீட்டி, சுரிகை, வாங்கு வளேதடி, கதைவாள், வில்,பாசம்,சக்கரம், இருப்புலக்கை, பரசு முதலிய ஆயுதங்களேத் தாங்கிக் கொண்டு புற்றீசல் போலப் போனர்கள்.

கலிங்க நாட்டின் தலேநகரை முற்றுகையிட்டார்கள். போர்ப் பறை முழங்கியது. கலிங்க மன்னன் வேங்கைபோல் வெளிப்பட்டுச் சேனேகளுடன் போர்க்களத்தில் வந்து எதிர்த்துப் போராடினன். இருதிறத்துச் சேனேகளுக்கும் கடும் போர் நிகழ்ந்தது. வெற்றி தோல்வியின்றி பல நாள் போர் நடைபெற்றது. இறுதியில் உறுதியுடன் கிருஷ்ணதேவராயன் புலியைச் சிங்கம் அடித்துக் கொல்வது போல் கலிங்க மன்னனே வாளால் வெட்டி வீழ்த்தினன்.

போர் நின்றது. கிருஷ்ணதேவராயன் வெற்றிச் சங்கை ஊதினன். கலிங்கத்தில் தனது கொடியைப் பறக்க விட்டான்.

அரண்மனேயில் நுழைந்து கருவூலத்திலுள்ள நவமணிகளேப் பொதி செய்து எடுப்பித்தான். அங்கு கலிங்க மன்னனுடைய ஏக

புதல்வியாகிய அழகிய பெண்மணியையுங் கண்டான். அவள் உருக்கி வார்த்து மெருகிட்ட தங்கச் சிலேபோல் காட்சியளித்தாள். வெற்றி பெற்ற வீரனுகிய கிருஷ்ணதேவராயன் அவளிடத்தில் கோழையாகி நின்ருன். தோழியருடன் அவளே தந்தப் பல்லக்கில் ஏற்றுவித்துத் தக்க பாதுகாவலுடன் புறப்படச் செய்தான். தன் நகரஞ் சேர்ந்து தாயாரை வணங்கினுன். கலிங்க ராஜகுமாரியைத் தாயிடம் ஒப்பு வித்தான். நவமணிகளேத் தனது கருவூலத்தில் சேர்ப்பித்தான்.

கலிங்கத்துக்கன்னி அரண்மனேயில் அழகின் சிகரமாகக் காட்சி யளித்தாள். அவள் உலாவுகின்றபோது அழகுத் தெய்வமே காட்சி யளிப்பதுபோல் விளங்கினுள். அவளேக் காணுந்தோறும் கிருஷ்ண தேவராயன் தன் மனதைப் பறிகொடுத்தான். அழலிடைப்பட்ட மெழுகுபோல் அவன் உள்ளம் உருகியது. காதல் பெருகியது. கலிங்கக்கன்னி கிருஷ்ணதேவராயனேக் கடைக்கண்ணுல் பார்த்து தன் மெல்லிய பவளம் போன்ற இதழை விரித்து, முத்துப் பற்கள் தோன்ற ஒரு புன்னகை செய்தபோது அவன் தன்னேயே மறந்து விட்டான். கலிங்கத்துப் போரின் வெற்றிச் சின்னமாக அவள் கிடைத்ததை நினைத்துப் பெருமகிழ்ச்சியடைந்தான். அவள் எழில் நலம் ஈடும் இணேயும் இன்றி நின்றது. கண்டு களிவண்டு போல் மயங்கினுன்.

கிருஷ்ணதேவராயன் உள்ளத்தில் மோகத் தீ கொழுந்து விட்டு எரிந்தது. அவளேத் திருமணஞ் செய்துகொள்ள விரும்பினுன்.

ஆனுல் வளர்ப்புத் தந்தையாகிய அப்பாஜியின் அனுமதியை எதிர்பார்த்தான். அவர் அதுபற்றி ஒன்றுமே பேசவில்லே. தானே அவரிடம் இதைக் கூற நாணினுன்.

ஒருநாள் அமைச்சரைப் பார்த்து, ''அப்பாஜி! நாம் கலிங்கத்தி லிருந்து கொண்டு வந்த பொருள்களேயெல்லாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டாமா?'' என்ருன். மதியூகியாகிய அவர் அவ னுடைய உள்ளக் குறிப்பை முன்னமே உணர்ந்திருந்தார்.

''அரசே! கெட்டுப் போகின்ற பொருள்கள் ஏதுமில்லேயே. வடை தோசையென்ருல் நாளேயிரா; எல்லாம் நவரத்தினங்கள் தாமே. சும்மா இருக்கட்டும். காலம் வரும்போது அதுபற்றிச் சிந்திப் போம்'' என்ருர். அவருடைய பதில் அவனுக்குப் பெரும் ஏமாற்றத் தைத் தந்தது. பாவம்! மிரள மிரள விழித்தான்.

சில தினங்கள் பொறுத்திருந்தான். அவன் மனதில் ஆசை வெள்ளம் பொங்கிக் கரைபுரண்டு பெருக்கெடுத்து ஓடியது.

''அப்பாஜி! கலிங்கக்கன்னியைத் தாங்கள் தங்கள் மருகியாக ஏற்றுக் கொள்ளும். தங்களுக்குப் பேரன் பிறக்க வேண்டாமா?'' என்ருன்.

அமைச்சர், ''மகனே! கிழக்கே உதிக்கும் கதிரவன் மேற்கே உதித்தாலும் உதிப்பான். கலிங்கத்தின் பெண் உனக்கு மனைவியாக நான் சம்மதிக்கமாட்டேன். உனக்கு வேறு நல்ல பெண்ணைப் பார்த்துக் கல்யாணஞ் செய்து வைப்பேன்; உன் கல்யாணத்தைப் பற்றி அக்கரை எனக்கு இல்லாமல் போகுமா? உன் நலத்தில் எனக்குள்ள அக்கரை வேறு யாருக்கும் இருக்க முடியாது'' என்றார்.

அரசகுமாரன் இதைக் கேட்டுத் திடுக்கிட்டான். உள்ளம் உலைந்தது. தலை சுற்றியது.

''அப்பாஜி! நான் தங்கள் குமாரன். என் மனம் அவளைத் தவிர வேறு யாரையும் விரும்பாது. உலகில் உள்ள பெண்கள் எல்லாம் என் சகோதரிகள். அப்பாஜி! தாங்கள் என்மீது பெருங்கருணை புரிந்து இந்த மங்கள காரியத்தை மனமகிழ்ச்சியோடு செய்யுங்கள்'' என்றான். அப்படிக் கூறும்போது அவன் குரல் தழுதழுத்தது. கண்ணில் நீர் மல்கியது.

அப்பாஜி, ''வேந்தே! நான் உயிருடன் இருக்கும்வரை இதற்கு இசைய மாட்டேன். உனக்கு இதில் பிடிவாதம் இருக்குமானால் என்னை விட்டுவிடு. நான் இந்தப் பதவியை விட்டு விலகிக் கொள்ளுகின்றேன். நீ அவளை மணந்து கொள்; சிந்தித்துச் சொல். உனக்கு நான் வேண்டுமா? கலிங்கத்துக் கன்னி வேண்டுமா?'' என்று ஒரு ராமபாணத்தைப் போட்டார்.

அரச குமாரன், ''அப்பாஜி! எனக்கு இருவருந்தான் வேண்டும்'' என்றான். ''மகனே! அமாவாசையும் பௌர்ணமியும் ஒரே நாளில் வராது'' என்றார் அமைச்சர்.

ஒரு வாரம் மௌனம் நிலவியது. அப்பெண்மணி அரண்மனையில் தானே உலாவுகின்றாள். அவளைக்கண்டு அவன் எப்படி தன் உள்ளத்தின் வேட்கையைத் தணித்துக் கொள்ளுவான்.

''அப்பாஜீ! நான் விரும்பிய அத்திருமகளை மணஞ்செய்து வைக்கவில்லையானால் என் இறுதிக் கடன்களை நீங்களே செய்ய வேண்டிவரும்'' என்றான்.

அவர் இந்த வார்த்தையைக் கேட்டு அஞ்சினார். காதலின் தோல்வியால் தற்கொலை செய்துகொள்ளுவோர் பலர். அந்த வகையில் இளவரசன் உயிரை விட்டுவிட்டால் என் செய்வது? குலமே அழிந்துவிடும்'' என்று எண்ணினார்.

''இளவரசே! உனக்கு அவளைத் திருமணஞ் செய்ய நான் இசைகின்றேன். நீ ஒரு நிபந்தனைக்குக் கட்டுப்பட வேண்டும்'' என்றார்.

இதனைக் கேட்டு அவன் உள்ளம் மகிழ்ந்தது. "அது என்ன நிபந்தனை?" என்று கேட்டான்.

"அப்பா! நீ அவளை மணஞ் செய்துகொள். சாந்திக் கல்யாணஞ் செய்துகொள்ளக்கூடாது. அவளுடன் தனித்து உறவாடக் கூடாது" என்றார் அமைச்சர்.

கிருஷ்ணதேவராயன் சிரித்தான். "அப்பாஜி! உங்கள் போக்கே ஒரு புதுமையாக இருக்கின்றது. திருமணஞ் செய்துகொள். அவளுடன் தனிமையுறவு கூடா என்கின்றீரே. சமையல் செய்துகொள். சாப்பிடக்கூடாது என்பதுபோல் இருக்கின்றது. இது யுக்தமன்று" என்றான்.

"அப்படியானால் கலியாணத்துக்கு நான் உடன்பட மாட்டேன்" என்றார். அரச குமாரன் முதல் கட்டம் முடியட்டும். பிறகு அந்த வகையில் அனுமதி பெறலாம் என்று எண்ணி இசைந்தான்.

கலிங்கக் கன்னிக்கும் கிருஷ்ணதேவராயனுக்கும் அதிவிமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. எல்லோரும் மணமக்களை வாழ்த்தினார்கள். நல்விருந்து, சொல்விருந்து, இசை விருந்து முதலிய எல்லாம் நடைபெற்றன.

இப்போது கிருஷ்ணதேவராயன் தன் மனைவியுடன் நெருங்கிப் பழகுகின்றான். அவள் தன் புன்முறுவலாலும் கடைக்கண் பார்வையாலும் உபசரிப்பாலும் அவனுடைய உள்ளத்தை மேலும் மேலும் கவர்ந்தாள். அவள்மீது அளவற்ற ஆர்வங் கொண்டான். இலையிலே படைத்த அன்னத்தை உண்ணாது பார்த்திருப்பதுபோல் ஆயிற்று அவனுடைய வாழ்க்கை.

ஒருநாள் அப்பாஜியைப் பார்த்து, "அப்பாஜி! தாங்கள் உத்தமமானவர், என் தந்தையின் தோழர், எனக்கு வளர்ப்புத் தந்தை. என் நலத்தில் கவனமுள்ளவர். கருணை கூர்ந்து சாந்தி முகூர்த்தம் செய்து உணர்ச்சியைத் தணிக்க வேண்டும்" என்றான்.

"அரசே! அதுதான் கூடாது. ஒருபோதும் நான் இதற்கு இசையேன். நீ மறுபடியும் இதைப்பற்றி என்னிடம் அனுமதி கேட்காதே" என்றார். நல்ல கட்டிளங்காளை. அடங்காத ஆவல். என்ன செய்வான். "அப்பாஜி! நீர் இதற்கு அனுமதி தர மறுத்தால் நானும் தங்கள் மருகியும் நஞ்சருந்தி மாண்டு போவோம். இருவருக்கும் ஒன்றாக நீர்க்கடன் செய்யும்" என்றான்.

அப்பாஜி சிந்தித்தார். ''மகனே! சாந்தி கல்யாணஞ் செய்து வைக்க இசைகின்றேன். ஆனால் ஒரு நிபந்தனை. அந்த அறையில் நானும் இருப்பேன். இதற்குச் சம்மதமா?'' என்றார்.

கிருஷ்ணதேவராயனுக்கு அவருடைய வார்த்தை ஆச்சரியத்தை நல்கியது. ''அப்பாஜி! இது உலகில் இல்லாத ஒரு செய்கை. நானும் தங்கள் மருகியும் இருக்கும் தனியறையில் தாங்களும் இருப்பதா? இது நீதியா? நெறியா? முறையா?'' என்றான்.

அமைச்சர், ''அப்படியானால் நான் இதற்கு இசைய மாட்டேன்'' என்றார். கிருஷ்ணதேவராயன், ''சரி. தாங்களும் இரும்'' என்றான்.

உயர்ந்த கட்டில், தந்தக் கட்டில், வெல்வெட்டு மெத்தை, தலையணை, போர்வை, மணிவிளக்கு எல்லாம் ஆயத்தம் செய்தார். படுக்கை மீது கிருஷ்ணதேவராயனைப்போல் ஒரு ரப்பர் பதுமை செய்து படுக்க வைத்தார் அமைச்சர். அப் பதுமையின் கழுத்தில் ஒரு தேன் நிறைந்த மண் குப்பியை வைத்தார். சால்வையால் கழுத்தை மூடி வைத்தார். ஒரு மூலையில் கிருஷ்ணதேவராயரும் தானும் பட்டுத் திரையில் மறைந்து நின்றார்கள். இரவு 10 மணி. இவைகளைக் கண்டு அரசன் திகைப்புற்றான். அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ''அப்பாஜி! இது என்ன வேடிக்கை?'' என்றான்.

''மகனே! இவை உனக்குப் புரியாது. பொறுத்திருந்து பார்'' என்றார்.

கலிங்கக்கன்னி தன்னை அலங்கரித்துக் கொண்டு அந்த அறையில் நுழைந்தாள். அவள்அமைச்சரும் அரச குமாரனும் மறைந்திருப்பர் என்பதை நினைத்துப் பார்க்க முடியாதுதானே? படுக்கையில் தன் கணவன் தூங்குகின்றான் என்று எண்ணினாள்.

உடனே அவள் பத்திரகாளிபோல் ஆனாள். அவள் கண்களில் தீப்பொறிகள் சிந்தின. கோபத் தீ கொழுந்துவிட்டு எரிந்தது. நெடு நாட்களாகத் தன் இடுப்பில் செருகி வைத்திருந்த உடை வாளை உருவினாள்.

''ஏ வீரவாளே! இவன் என் தந்தையைக் கொன்றவன். தந்தையைக் கொன்றவனுடனா நான் வாழ்வது? பழிக்குப் பழி தீர்த்துக் கொள்'' என்று வாய்விட்டுக் கூறிக் கர்ஜனை புரிந்தாள். வாளை கழுத்தில் வீசினாள். பதுமையின் தலை தெறித்து ஒருபுறம் விழுந்தது. தேன் குப்பி உடைந்து தேன் துளிகள் அவள் வாயில் சிந்தின. தித்தித்தது.

உடனே அவள் அதிசயம் அடைந்தாள். ''ஆ! உதிரம் தித்திக்குமா? இவருடைய உதிரம் இனிக்குமானால் குணமும் இனிக்குந்

தானே. இத்தகைய இனிய கனியமுதமன்ன கணவனுடன் வாழ்ந்து இன்புறாமல் நம் வாழ்வைக் கெடுத்துக் கொண்டோமே? அந்தோ!'' என்று அலறினாள். வாளை வீசி எறிந்தாள். என் பிராணநாதா? உம்மைக் கொன்றுவிட்டேனே. இல்லை என் வாழ்வைக் கொன்று விட்டேனே. இனி எப்பிறப்பில் உம்மைக் காண்பேன். என்மீது அளவற்ற அன்பு வைத்திருந்த உம்மை நான் தணியாத சினத்தால் கொன்று பழிபாவத்துக்கு ஆளாகிவிட்டேனே! என்னைத் தெய்வம் மன்னிக்குமா? பெண்ணுலகுக்கே பெரும்பழி தேடிவிட்டேனே?'' என்று கூறிப் புலம்பியழுதாள்.

திரை மறைவில் இருந்த கிருஷ்ணதேவராயன் இந்த நிகழ்ச்சியைக் கண்டு திடுக்கிட்டான். அப்பாஜி! "என் அருமந்த மகனே! பார்த்தனையா? இத்தனை காலம் தவணை போட்டேனே. தந்தை மாண்டு இத்தனை நாட்களுக்குப் பின்னும் இவளுக்கு இத்தனை சீற்றம் இருக்குமானால், தொடக்கத்தில் எவ்வளவு இருந்திருக்கும். உனக்கு அப்போதே கல்யாணம் புரிந்து சாந்தி முகூர்த்தம் செய்திருந்தால் மகனே! நீ பிழைத்திருப்பாயா? இவள் வாளுக்கு உன் வாழ்நாள் பலியாகியிருக்குமே? இதற்காகத்தான் தவணை போட்டு வந்தேன். இதனை நுட்பமாக அறிந்துதான் இந்த ஏற்பாடு செய்தேன். இரகசியமாக என்னுடன் வா'' என்று கூறி அவளுக்குத் தெரியாமல் வேறு வழியாக வெளியேறினார்கள்.

சிறிது நேரம் பொறுத்து கதவைத் தட்டினார் அமைச்சர். அவள் கதவைத் திறந்தாள்.

அமைச்சரின் அடிமலர்மீது வீழ்ந்தாள், ''மாமா! என்னை வாளால் வெட்டியெறிவீராக. நான் கொழுநனைக் கொன்ற கொலைகாரி'' என்றாள்.

அப்பாஜி, ''அம்மா! இது என்ன காரியம்? மாலை சூட்டிய மணவாளனை வதைத்து விட்டனையா? ஏன் கொன்றாய்? இப்போது ஏன் அழுகின்றாய்?'' என்று கேட்டார்.

''மாமா! தந்தையைக் கொன்றாரே என்ற சீற்றத்தால் இவரை வெட்டிவிட்டேன். இவருடைய உதிரம் என் நாவில் பட்டு இனிக்கின்றது. உதிரம் இனிக்குமானால் இவர் தெய்வப் பிறப்பு. உத்தம நாயகனுடன் வாழும் பெரும்பேற்றை யிழந்துவிட்டேன். இனி நான் வாழ மாட்டேன். என்னைக் கொன்று போடும்'' என்றாள்.

மதிநுகியான மந்திரியார், ''மருமகளே! வருந்தாதே. அடுத்த மலையில் ஒரு பரம ஞானியிருக்கின்றார். அவர் இறந்தவரை எழுப்பு

வதாக நான் அறிகின்றேன். அயர்ச்சியில்லாத முயற்சி உயர்ச்சி தரும். அம்மா! உன் திருமாங்கல்ய பயன் வீணுகாது'' என்று கூறி அவளை அப்புறம் போகச் செய்து, அந்த ரப்பர் பதுமையை அப்புறப் படுத்தினுர்.

கிருஷ்ணதேவராயனைச் சந்தித்தார். ''மகனே! இப்போது கலிங்கக் கன்னி தன் மன மாசகன்று உத்தமியாகிவிட்டாள். இனி அவளைப்போல ஒரு உத்தமியை எங்கும் காண முடியாது. காயில் நன்ருகப் புளிக்கும் மல்கோவா பழுத்துவிட்டால் மிகவும் இனிக்கும். அது போல் அவள் திருந்தினுள். செய்தது குறித்து வருந்தினுள். நீ நடந்ததை நினைக்காதே. நினைத்து அவளை வெறுக்காதே. இப்போது இறந்து பிழைத்தாய். உன்னை முனிவர் மூலம் பிழைப்பித்துள்ளேன். என் மீது ஆணை. நீ அவளுடன் கருத்தொருமித்துக் காதலுடன் ஈருடம்பு ஒருடம்பாக வாழ்வாயாக'' என்று கூறி, அழைத்துச் சென்ருர். மந்திரியாருடன் மணவாளன் வருவதைக் கண்ட அவள் அதிசயம் அடைந்தாள். ஓடி வந்து கணவன் கால்மீது வீழ்ந்து அழுதாள். தொழுதாள்.

அப்பாஜி ''அம்மா! முனிவர் உன் கணவனைத் தன் தவ வலிமையால் எழுப்பிவிட்டார். இனி உங்கள் வாழ்வு சிறக்கும். ஒற்றுமையாக வாழுங்கள்'' என்று கூறி, அத் தனி அறையில் இருவரையும் இருத்திவிட்டுச் சென்ருர்.

கிருஷ்ணதேவராயரும் கலிங்கத்துக் குமாரியும் இனிது வாழ்ந்தார்கள். தன் மதிமந்திரியின் அறிவுத்திறத்தை நினைந்து அவர்மீது பெருமதிப்பு கொண்டு அவரைத் தெய்வமாக வைத்து வழிபட்டான்.

ஆகவே மகளே! இப்படி இடர்களை விலக்கி இன்பத்தை விளைத்து நலஞ் செய்கின்றவன்தான் அமைச்சன். இதுபோன்ற தன்மை ஒரு மனைவியிடம் அமைய வேண்டும்'' என்று ஆசிரியர் தமிழ்மணிக்குக் கூறினுர். தமிழ்மணி, இந்த வரலாற்றைக் கேட்டு விம்மிதம் அடைந்தாள்.

உ

முருகா

# மகாபாரதம்

---

## சாந்தி பருவம் ஆபத்தருமம்

(21-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### நட்பு

பீஷ்மரைப் பார்த்துத் தருமர், "குருநாதரே! நட்பு எப்படியிருக்கவேண்டும்? நண்பனுடைய தகைமை எத்தகையது? நண்பனுடைய இலட்சணம் யாது?" என்று கேட்டார்.

"தருமா! பண்புள்ளவன்தான் நண்பன். உள்ளும் புறமும் ஒத்த குணமே நட்புக்குரிய பண்பு. பயன் கருதாமல் நட்பு செய்கின்றவன் சிறந்தவன். நட்பின் தகைமை நனிசிறந்தது.

நட்பை மறந்து நன்றி கொன்றவனுக்கு உய்வு கிடையாது. இது பற்றி ஒரு வரலாறு உண்டு.

### நன்றி கொன்றவன் கதை

வடக்கே மத்திய தேயத்தில் பிறந்த ஒரு பிராமணன். கரிய நிறமுடைய அவன் வேதங்களை ஓதாதவன். பேராசையுடையவன். அவன் மிலேச்சர்கள் வாழும் ஓர் ஊருக்குச் சென்றான். அங்கே தானஞ் செய்வதில் விருப்பமுள்ள ஒரு திருடன் இருந்தான். அவன் வீட்டில் இந்தப் பிராம்மணன் உணவை யாசித்தான். அந்தத் திருடன் பிராம்மணனை வரவேற்று, உணவும் ஓராண்டுக்கு வேண்டிய உணவுப் பண்டங்களையும், உடைகளையும், பருவமுள்ள ஒரு பெண்ணையும் கொடுத்தான்.

கௌதம கோத்திரத்திற் பிறந்த அந்தப் பிராம்மணன் அவன் தந்த வீட்டில் பெண்ணுடன் கூடி மகிழ்ச்சியாக இருந்தான். அம்பினால் பறவைகளை யடித்துத் தின்பான். அவனிடம் அன்பும் இரக்கமும் மருந்துக்கும் இல்லை. திருடர்களைப் போல் அவன் வாழ்ந்தான்.

அங்கு மரவுரியும் சடைமுடியும் உடையவரும், வேதங்களின் கரையைக் கண்டவரும் ஆகிய ஒரு பிராம்மணர் வந்தார். அவர் உணவை நாடி இந்த ஒழுக்கமில்லாத பிராம்மணனுடைய வீட்டை அடைந்தார். கௌதமன் என்ற அந்த அந்தணன் ஆயுதம் ஏந்தியவனாய், தோளில் இறந்த அன்னப்பட்சிகளைச் சுமந்து கொண்டு வந்தான். அவனைக் கண்டு வந்த அந்தணர் நாணமுற்றார். உடம்பெல்லாம்

உதிரக்கறையும் அரக்கத் தோற்றமும் உடைய அவனைப் பதிதன் என்று எண்ணினர்.

"அப்பா! நீ பிராம்மணனா? நற்குலத்தில் பிறந்த நீ இப்படியான கெட்ட தொழிலைச் செய்கின்றாயே? உனக்கு வெட்கமாக இல்லையா? உன் முன்னோர்கள் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவர்கள் ஆயிற்றே? வேதம் ஏந்தும் கையில் வில் ஏந்தலாமா? புனித குலத்தில் பிறந்த நீ புலால் உண்ணலாமா? இது உனக்கு அழகா? பாவமூட்டையைச் சுமக்கின்றாய்? பட்சி மூட்டையைச் சுமக்கவில்லை" என்றார்.

கௌதமன் நாணமுற்றான். "அந்தணரே! நான் வறுமையின் கொடுமையால் வாடி இந்தப் பாவச் செயலில் ஈடுபட்டுவிட்டேன். உம்மைக் கண்டு நான் புனிதனாகின்றேன். இன்றிரவு இங்கு இரும்" என்றான். வந்த அந்தணர் ஒன்றையுந் தொடாமல் அன்றிரவு அங்கு வசித்தார். மறுநாள் பகல் அவர் அவனிடம் விடைபெற்றுச் சென்றார்.

கௌதமன் பொருளாசை கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டான். வழியில் கடல் யாத்திரை செய்யும் வர்த்தகர்களைக் கண்டான். அவர்களுடன் கூடிப் பயணஞ் செய்தான். மலைச்சாரலில் தூங்கும்போது வர்த்தகர்கள் யானையால் கொல்லப்பட்டு மாண்டார்கள். கௌதமன் மட்டும் பிழைத்தான். உள்ளமும் உடம்பும் நடுங்கி அங்கும் இங்கும் அலைந்தான்.

நந்தவனம் போன்ற ஒரு சோலையைக் கண்டான். ஆல், அரசு, ஆச்சா, பனை, அகில் முதலிய மரங்கள் அடர்ந்து இருந்தன. சந்தன மரங்கள் இடையிடையே நறுமணங் கமழ்ந்து கொண்டிருந்தன. பறவைகள் இனிது ஒலி செய்து கொண்டிருந்தன. அங்கே மணல்கள் பொன்மயமாய் காட்சியளித்தன. மனதைக் கவரும் வனப்புள்ள அச்சோலையின் நடுவே சிறந்த ஓர் ஆலமரத்தைக் கண்டான். மங்களகரமான அதன் நிழலில் அமர்ந்து இளைப்பாறினான். இனிய பூங்காற்று வீசியது. பொன்போன்ற மெல்லிய மணலில் படுத்து உறங்கிவிட்டான். பொழுது சாய்ந்தது.

நாடீசங்கன் என்ற பேருள்ள கொக்கு அந்த மரத்தில் வாழ்ந்து கொண்டிருந்தது. அது காசிப முனிவருடைய பிள்ளை. அறிவும் அன்பும் உடையது. பறவைகட்கு அரசு. பிரமதேவருடைய தோழமை பெற்றது. அப் புள்ளரசு பிரம்மலோகம் போய் தன் வீடான ஆலமரத்தை யடைந்தது. உயர்ந்த பொன்னாலாகிய அணிகலன்களை யணிந்ததும், ராஜதர்மா என்று புகழ் பெற்றதுமான அப் பறவை யரசைக் கண்டு கௌதமன் அதிசயம் அடைந்தான். அதனைக் கொல்ல நினைத்தான்.

பறவையரசு பிராம்மணனைப் பார்த்து, ''ஐயா! உமக்கு நல் வரவு. எனது புண்ணியப் பயனால் நீர் என் இல்லத்துக்கு வந்திருக் கின்றீர். ஆதித்தபகவான் அத்தமத்தை யடைந்துவிட்டான். என் இருப்பிடமான இங்கு சுகமே இன்றிரவு இருந்துவிட்டு நாளைக் காலை போகலாம்'' என்று இன்னுரை கூறியது.

கௌதமன் அதன் இன்னுரையைக் கேட்டு அதிசயம் அடைந் தான்.

பறவை, ''நான் காசிபருடைய குமாரன். என் தாய் தாட்சா யணி என்ற பதிவிரதை. உன் வரவு எனக்கு மகிழ்ச்சியைத் தரு கின்றது'' என்று கூறி, சாவமரத்தின் மலர்களைப் பரப்பி அவனை இருத்தியது. அவனுக்கு இனிய கனிகளைத் தந்து பசியாறச் செய்தது, அவனுடம்பில் வந்த வேர்வை நீங்க தன் சிறகினால் விசிறியது.

''நான் கௌதம கோத்திரத்திற் பிறந்த பிராம்மணன்'' என்று அவன் தன்னைக் கூறிக்கொண்டான். இலைகளைப் பரப்பி அதன்மீது மலர்களைப் பரப்பிப் படுக்கை தயாரித்தது. அதன்மீது கௌதமன் படுத்துக்கொள்ளத் தொடங்கினான்.

''தாங்கள் வந்த காரணம் யாது?'' என்று பட்சி வினவியது. ''ஐயா! நான் ஏழை. பொருள் தேடுவதற்காகக் கடலில் பிரயாணஞ் செய்ய வந்தேன்'' என்றான் கௌதமன்.

நாடீசங்கன், ''நண்பரே! நீர் கவலைப்பட வேண்டாம். பொருள் வருவதற்கு நான்கு வழிகள் உண்டு. நண்பன், அறிவு, கல்வி, பொருள் என்ற நான்கும் பொருளை யீட்டித்தரும் என்று வியாழ பகவான் விளம்பியிருக்கின்றார். நண்பரின் மூலம் பொருள் கிடைக் கும். நான் உமக்கு நண்பன். நன்கு நித்திரை செய்யும். உமக்கு நிரம்ப வும் பொருள் கிடைக்குமாறு செய்வேன்'' என்று கூறியது.

பிராம்மணன் இனிது தூங்கினான். பொழுது விடிந்தது.

(தொடரும்)

## வரப்பெற்றோம்

1. ஸ்ரீ சங்கராசாரியர் சரித்திரம் (ஸ்ரீசங்கர விஜயம்) நஞ்சை இடையாறு ஸ்ரீ M. பரிமள கண்டர் அவர்களால் பதிப்பிக்கப் பெற்றது. விலை குறிப்பிடப்படவில்லை. கிடைக்குமிடம்: பரிமள ஆசிரமம், வேலூர் (சேலம்)

2. ஸ்ரீ மீனாட்சி கல்யாணம்.

3. வேலுமயிலுந் துணை. (கந்தரநுபூதி விரிவுரை)

4. பாவை அருளிய பாவை மாலை.

5. சிவநாமம் கேட்பாய் செல்வி (திருவெம்பாவை விரிவுரை).

மேலே குறிப்பிட்டுள்ள நான்கு நூல்களும் ஸ்ரீ ராமகதாரத்னம் வி. தியாகராஜன் அவர்கள் எழுதியவை. விலை குறிப்பிடப்படவில்லை. பின்வரும் விலாசத்துக்கு எழுதி விபரம் பெறலாம். ஸ்ரீ ராம கதாரத்ன. வி. தியாகராஜன், 3119, கீழ இரண்டாம் வீதி, புதுக்கோட்டை.

---